Liberation Tigers Of
TAMIL EELAM

# 1993 ஆம் ஆண்டின் 01ஆம், 0௨ஆம், 0௫ஆம் எண் சட்டங்களிற்கான திருத்தச் சட்டம்

## 1994

## 1994ஆம் ஆண்டின் 0௨ ஆம் எண் சட்டம்

தமிழீழ நீதி நிர்வாகத்துறை,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்

# 1993 ஆம் ஆண்டின் 01 ஆம் 02 ஆம் 05 ஆம் எண் சட்டங்களிற்கான திருத்தச் சட்டம்

## 1994

### 1994 ஆம் ஆண்டின் 02 ஆம் எண் சட்டம்

தமிழீழ நீதி நிர்வாகத்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்
தமிழீழம்

1993 ஆம் ஆண்டின் 01ஆம் 02ஆம் 5ஆம்
எண் சட்டங்களிற்கான திருத்தச் சட்டம்

முதற்பதிப்பு - ஆகஸ்ட் 1994
வெளியீடு - நீதி நிர்வாகத்துறை
தமிழீழ விடுதலைப் புலிகள்
தமிழீழம்.

அச்சுப்பதிப்பு- அந்திவானம் பதிப்பகம். விலை ரூபா - 40/-

## 1994 ஆம் ஆண்டின் 2ஆம் எண் சட்டம்

தமிழீழ சட்டக்கோவையிலும், தமிழீழத்திருத்தச் சட்டக்கோவையிலும், தமிழீழ மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்திலும் சில விடயங்களை நீக்குவதற்கும் திருத்தஞ் செய்வதற்கும் மேலதிகமான சில விடயங்களைச் சேர்ப்பதற்குமானதொருசட்டம்.

இச்சட்டம் தமிழீழ தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களின் ஒப்புதலுடன் சட்டமாக்கப்படுகிறது.

01. இச்சட்டம் 1993 ஆம் ஆண்டின் 01 ஆம் 02 ஆம் 05 ஆம் இலக்கச் சட்டங்களின் திருத்தச் சட்டம் என்பதுடன் இதை 1994 ஆம் ஆண்டின் 02 ஆம் எண் சட்டமெனவும் எடுத்துக் காட்டப்படலாம்.

" இச்சட்டத்தின் பெயரும் சுருக்கப் பெயரும் ".

02. இச்சட்டம் 1994 ஆம் ஆண்டு 09 ஆம் மாதம் 05 ஆம் நாள் முதற் செயற்படுத்தப்படும்.

" நடைமுறைக்கு வரும் நாள் "

03. தமிழீழச் சட்டக்கோவையின் தமிழீழ நீதிமன்ற அமைப்பு விதிகள் பக்கம் ஐந்து (05) பிரிவு பன்னிரண்டு உப பிரிவு ( ஆ ) இதனகத்துப் பின்வரும் பந்தியினால் திருத்தி அமைக்கப்படுகின்றது. "ஏதாவது ஒரு வழக்கின் தீர்ப்பிற்கு எதிராக மேன்முறையீடு செய்யும்போது மேன்முறையீட்டுக் கட்டணமாக ரூபா ஆயிரமும் (1000/-) தீர்ப்புத் தவிர்ந்த ஏனைய மேன்முறையீடுகளைச் செய்யும்போது ரூபா. ஐந்நூறினையும் (500/-) குறித்த மன்றிற் செலுத்துதல் வேண்டும்"

தமிழீழச்சட்டக்கோவை பக்கம் (05) பிரிவு 12 (ஆ) வினைத் திருத்துவது பற்றி

04. தமிழீழச் சட்டக்கோவை பக்கம் ஒன்பது ( 9 ) பிரிவு மூன்று ( 3 ) உப பிரிவு ( ஈ ) பின்வருமாறு திருத்தப்படுகின்றது. "வழக்கொன்றில் மேன்முறையீட்டுக்கு விண்ணப்பிப்பவர் நீதிமன்ற அமைப்பு விதிகளின் பிரிவு பன்னிரண்டு ( 12 ) உப பிரிவு ( ஆ ) விற்கான திருத்தத்தின்படி தீர்ப்புக்கெதி

தமிழீழச்சட்டக்கோவை பக்கம் 9, பிரிவு 3 (ஈ) திருத்தப்படுவது பற்றி.

ரான மேன்முறையீடு எனில் ரூபா ஆயிரமும் (1000/-) தீர்ப்பல்லாத ஏனைய மேன்முறையீடுகள் தொடர்பானதாயின் ரூபா. ஐந்நூறு (500/-) உம் மேன்முறையீட்டுக் கட்டணமாக அறவிடப்படல் வேண்டும்.

தமிழீழச்சட்டக் கோவையின் பக்கம் 8, பிரிவு 21 உப-பிரிவு (அ) நீக்கப்படுதல் தொடர்பாக.

05. தமிழீழச் சட்டக்கோவையின் நீதிமன்ற அமைப்பு விதிகள் பக்கம் (08) எட்டில் அமைந்துள்ள பிரிவு (21) இருபத்தொன்று உப பிரிவு 'அ' முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வரும் விதி சேர்க்கப்படுகிறது. "தகுதி வாய்ந்த விசாரணை அமைப்பினால் ஏற்கனவே விசாரணை செய்யப்பட்டு வழங்கப்பட்ட தீர்ப்பினைத் தொடர்புடைய பகுதியினர் ஏற்றுக்கொண்டுள்ள அத்தகைய வழக்குகளின் தொடர்புடைய கட்சியினர் தீர்ப்பை நடைமுறைப்படுத்தும்படி உரிய நியாயாதிக்கமுடைய நீதிமன்றுகளைக் கேட்கும் பொழுது குறித்த தீர்ப்பை உரைத்து அதனை அம்மன்று நடைமுறைப்படுத்தலாம். அச்சமயத்தில் அத்தீர்ப்பினை ஏற்க மறுக்கும் பகுதியினர் தமிழீழச் சட்டக்கோவையின் குடியியல் வழக்கு நடைமுறைப்படி புதிய வழக்காகக் குறித்த மன்றிலேயே தாக்கல் செய்யலாம்.

தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் 17 பிரிவு 4 உப-பிரிவு (1) நீக்கப்படுதல் பற்றி.

06. தமிழீழச் சட்டக்கோவையின் குற்றவியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பக்கம் 17. பிரிவு நான்கு (04) உப பிரிவு ஒன்று (01) நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வரும் விதி சேர்க்கப்படுகிறது. "மரணதண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளிகளும், இருபது (20) வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்குச் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டவர்களும் மட்டும் தமது தண்டனையைக் குறைக்குமாறு தமிழீழத் தேசியத் தலைவருக்குக் குறித்த நீதிமன்று ஊடாகக் கருணை மனுச் சமர்ப்பிக்கலாம். தமிழீழத்

தேசியத் தலைவரின் கட்டளை நீதிமன்றின் ஊடாக வெளியரங்கப்படுத்தப்படும்"

07. அ) தமிழீழச் சட்டக்கோவையின் குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பக்கம் 19 இல் அமைந்துள்ள பிரிவு (1) ஒன்று உப பிரிவு 'ஆ' விற் காணப்படும் "தொடர்புடைய ஆவணங்களில் இரு பிரதிகள்" என்பது நீக்கப்பட்டு இதற்கீடாக "தொடர்புடைய ஆவணங்களின் ஒரு பிரதி" எனும் விடயம் புகுத்தப்படுகிறது.

தமிழீழச்சட்டக் கோவையின் குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பக்கம் 19 பிரிவு 1இன் தொடர்புடைய ஆவணங்கள் பெறுவது பற்றி.

ஆ) அதேபோல் தமிழீழச் சட்டக்கோவையிற் குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பக்கம் (21) இருபத்தொன்றில் அமைந்துள்ள பிரிவு நான்கு (04) உப பிரிவு 'ஈ' நீக்கப்பட்டு அதற்கீடாகத் "தொடர்புடைய ஆவணங்களில் ஒரு பிரதி" என்னும் விடயம் புகுத்தப்படுகிறது.

விளக்கம்

ஒரு வழக்கின் பகுதியாரிற்கு, எதிர்ப் பகுதியினரால் நீதிமன்றத்திற் சமர்ப்பிக்கப்பட்ட ஆவணங்களின் பிரதிகள் தேவைப்படுமிடத்து, 1993 ஆம் ஆண்டின் இரண்டாம் (02) இலக்கத் திருத்தச் சட்டத்தின் பிரிவு 01 இன் தேவைப்பாடுகட்கு அமைவாகக் குறித்த நீதிமன்று ஊடாகப் பெற்றுக் கொள்ளலாம்.

08. அ) தமிழீழச் சட்டக்கோவையின் 1993 ஆம் ஆண்டின் இரண்டாம் (02) எண் திருத்தச் சட்டத்தின் பிரிவு 6-ன் இரண்டாம் பந்தி முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வரும் விதி சேர்க்கப்படுகின்றது.

குடியியல் வழக்குகளில் வழக்குத் தொடுநரிடமிருந்து நிவாரணவரி அறவிடல் பற்றி

''தொழில் நீதிமன்ற விண்ணப்பங் கள் விவாகரத்துத் தாபரிப்புப் போன்ற வழக்குகள் தவிர்ந்த ஏனைய குடியியல் வழக்குகளைத் தாக்கல் செய்யும் போது ஆகக்குறைந்த கட்டணமாகக் குறித்த மன்றில் ரூபா. 250/- செலுத்தப்பட வேண்டும். வழக்கின் பெறுமதி ரூபா. 5000/-ற்கு மேற்படும் போது ஒவ்வொரு 1000/-ரூபாவிற்கும் ரூபா. 50/- வீதம் செலுத்த வேண்டும். ஆனால் வழக்கின் பெறுமதி ரூபா. 20,000/-ற்கு மேற்படும் போது ஒவ்வொரு ரூபா. 5000/-ற்கும் ரூபா. 25/- வீதம் வழக்குத் தாக்கல் செய்யும்போது குறித்த மன்றிற் செலுத்துதல் வேண்டும்.

**குடியியல் வழக்குகளில் எதிராளிகளிடமிருந்து நிவாரண வரி அறவிடல் பற்றி.**

ஆ) இவ்வொழுங்கு தமிழீழச் சட்டக் கோவையின் பக்கம் 21-ல் அமைந்துள்ள குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பிரிவு (04) நான்கு உப பிரிவு, ஈ, ற்கு அமைவாக எதிராளிகளால் மறுமொழியணைக்கப்படும் அமையங்களில் எதிராளிகளிடமிருந்து நிவாரணவரி அறவீடு செய்யப்படுவதற்கும் ஏற்புடையதாகும்.

விளக்கம் 01

இப்பிரிவிற்கான வழக்கின் பெறுமதி வழக்காளியால் முன்வைக்கப்பட்ட ஒரு தொகையாக இருத்தல் வேண்டும்

விளக்கம் 02

எதிராளிகளால் அல்லது எதிராளியால் ஒருமித்தோ தனித்தோ அணைக்கப்படும் ஒவ்வொரு மறுமொழி தொடர்பிலும் வரி அறவிடப்படல் வேண்டும்.

எடுத்துக்காட்டு - 01

'கா' எனும் வழக்குத் தொடுநர் 'க' என்னும் எதிராளிக்கு எதிராக ரூபா. 40 000/- பெறுமதியான பணவழக்கை இடுகிறார். இவ்வழக்கில் எதிராளியான 'க' ஒரு மறு மொழியை அணைக்கிறார். 'க' விடமிருந்து நிவாரண வரியாக (ரூபா. 1100/-) ஆயிரத்து நூறு ரூபா அறவிடப்படல் வேண்டும்.

எடுத்துக்காட்டு - 02

'க' என்னும் வழக்குத் தொடுநர் 'கா' 'கி' என்பவர்களுக்கு எதிராக ரூபா. (6000/) ஆறாயிரம் பெறுமதியான ஒரு ஈட்டு வழக்கினை இடுகிறார். 'கா' வும் 'கி' யும் தனித்தனியாகக் 'க' வுக்கு எதிராக மறுமொழியை அணைக்கிறார்கள். இங்கு 'கா' விடமும் 'கி' யிடமும் முறையே ரூபா. முன்னூறு (300/-) நிவாரண வரியாக அறவிடப்படல் வேண்டும்.

எடுத்துக்காட்டு - 03

'க' என்பவருக்கும் 'கி' என்பவருக்கும் எதிராகக் 'கா' என்பவர் ரூபா (4000/-) நாலாயிரம் பெறுமதியான வாடகை வழக்கொன்றினைத் தாக்கல்செய்கிறார். ஆதலாற் 'க' வும் 'கி' யும் இணைந்து ஒருமித்து மறுமொழியைக் 'கா' வுக்கு எதிராக அணைக்கிறார்கள். இங்கே 'க' 'கி' என்போரிடமிருந்து மொத்த நிவாரண வரியாக ரூபா. (250/-) இருநூற்றைம்பது அறவிடப்படல் வேண்டும்.

1994 ஆம் ஆண்டின் 2ம் எண்சட்டத்தின் பிரிவு 6 உடன் நிவாரணவரி பற்றிய விடயம் சேர்ப்பது தொடர்பாக

ஆ) தமிழீழச் சட்டக்கோவையின் 1994 ஆம் ஆண்டின் (02) இரண்டாம் எண் திருத்தச் சட்டத்தின் பிரிவு (06) ஆறுடன் இதனகத்துப் பின்வரும்விடயஞ் சேர்க்சப்படுகிறது ''குடியியல் வழக்குகளான வசதியுரிமை வழக்குகள், குத்தகை தொடர்பான' வழக்குகள், ஆதனங்களின் எல்லைப் பிணக்குத் தொடர்பான வழக்குகள் என்பவற்றுக்கு நிவாரண வரி ரூபா (250/-) இருநூற்றைம்பதிற்குமேற்பட அறவிடப்படலாகாது.

தமிழீழச்சட்டக் கோவையின் பக்கம் 21ன் பிரிவு 04 நான்கு உப-பிரிவு 'உ' வுடன் சில விடயங்கள் சேர்க்கப் படுவது தொடர்பாக.

09. தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் (21) இருபத்தொன்றில் அமைந்துள்ள குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பிரிவு (04) நான்கு உப பிரிவு 'உ' வுடன் இதனகத்துப்பின்வருவன சேர்க்கப்படுகின்றன. 'எதிராளியால் மறுமொழியணைக்கப் பட்ட நாளில் இருந்து பதினைந்து (15) நாட்களுள் வழக்காளியோ, எதிராளியோ மேலதிகஆவணங்கள் அல்லது வழக்கறிக்கை அல்லது மறுமொழி அறிக்கைத் திருத்தங்கள் அல்லது உரிமைக் கோரிக்கை அல்லது மறுப்புக் கோரிக்கைத் திருத்தங்கள் அல்லது எதிர் மறுமொழிகள் என்பவை களைக் குறித்த நீதிமன்றில் அணைக்கலாம். இவ்வமயத்தில் நீதிமன்று தேவையெனக் கருதுமிடத்து முதல் விளக்கத் தினத்தை மறுமொழியணைத்த நாளிலிருந்து (45) நாற்பத்தைந்து நாட்கள் வரை செல்லக்கூடிய ஒரு நாளிற்குத் தேதியிட்டு முதல் விளக்கத்தை நடத்தலாம்.

விளக்கம் - 01

முதல் விளக்க நாளன்று உரிமைக் கோரிக்கை தொடர்பான தெளிவுரை வழக்காளி பகுதியினராலும் மறுப்புக்

கோரிக்கை பற்றிய தெளிவுரை எதிராளி தரப்பினராலும் சுருக்கமாக மேற்கொள்ளப் படுவதுடன், அன்றைய நாளில் இணக்கம் செய்து வைத்தல் அல்லது வழக்கெழு வினாக்கள் எழுப்புதல் என்பனவும் இடம் பெறுதல் வேண்டும். அத்துடன் முதல் விளக்கம் முடிவடைந்த நாளில் இருந்து (30) முப்பது நாட்களுக்குக் குறையாத அத்தகையதொரு நாளிற்கு இரண்டாம் விளக்கத்திற்குத் தேதியிடப்படுதல் வேண்டும்.

**விளக்கம் – 02**

வழக்கெழுவினாக்கள் எழுப்பப்படும் பொழுது அவை வழக்கறிக்கை, உரிமைக்கோரிக்கை, மறுமொழியறிக்கை, மறுப்புக்கோரிக்கை, எதிர்க்கோரிக்கை, எதிர்மறுமொழி என்பன வற்றிற்குட்பட்டிருத்தல் வேண்டும். ஆயின் சட்டஞ் சம்பந்தமான வழக்கெழு வினாக்கள் இவ்விதியிற்குப்புற நீங்கலாய் அமைதல் வேண்டும். சாட்சிகளின் விடயங்கள் தொடர்பாகவோ, சட்டந் தொடர்பாகவோ எழுப்பப்படும் வழக்கெழு வினாக்கள் தொகுப்புரைக்கு முன் வழக்கின் எக்கட்டத்திலேனும் எழுப்பப்படலாம்.

10. தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் (21) இருபத்தொன்றில் அமைந்துள்ள பிரிவு (04) நான்கு, உப பிரிவு, ' ஊ ' முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின் வரும் விடயம் சேர்க்கப்படுகிறது. "முதல் விளக்க நாளன்றும் விளக்கங்கள் தொடர்ந்து இடம்பெறும் நாட்களிலும் வழக்காளியும், எதிராளியும், நீதிமன்றிலே தவறாது சமுகம் தந்திருக்கவேண்டும். எனினும் வழக்கின் தொடர்புடைய சான்றுரைஞர் அல்லது சான்றுரைஞர்கள் குறித்த வழக்கில் நீதிமன்றின் தேவைப் பாடுகளை ஈடுசெய்தற் பொருட்டு அவ்

தமிழீழச்சட்டக் கோவையின் பக்கம் 21 இன் பிரிவுடன் உப-பிரிவு (ஊ) நீக்கப்படுதலும் அதற்கீடானதொரு விடயம் புகுத்தப்படுதலும்

வாறான ஒரு நாளில் நீதிமன்றத்திற்கு வருகை தரும்படி நீதியாளராற் பணிக்கப் பட்டதன் மேற்குறித்த நீதிமன்றில் தவ றாது வருகை தந்திருத்தல் வேண்டும்.

தமிழீழச்சட்டக் கோவையின் பக்கம் (21) பிரிவு (4) உப பிரிவுகள் (எ, ஏ, ஐ) நீக்கப் படுவதும் உப பிரிவு 'ஐ' க்கு ஈடாகப் புது விதி சேர்ப்பதுவும் பற்றி.

11. தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் (21) இருபத்தொன்றில் அமைந்துள்ள குடியியல் வழக்கு நடவடிக்கை முறைகள் பிரிவு ( 4 ) நான்கு உப பிரிவுகள் 'எ' 'ஏ' 'ஐ' என்பன முற்றாக நீக்கப்படுகின்றன. குறித்த பிரிவு 'ஐ' இன் ஏற்பாடுகளுக்குப் பதிலாக இதனகத்துப் பின்வரும் அம்சம் சேர்க்கப்படுகிறது, "இரண்டாம் விளக்க நாளன்று வழக்காளி தரப்புச்சாட்சியங் களும் அதன் பின்னர் எதிராளி தரப்புச் சாட்சியங்களும் நீதிமன்றில் நெறிப்படுத் தல் வேண்டும். அவ்வாறு நெறிப்படுத்தப் படும் பொழுது முறையே ஒவ்வொரு சான் றுரைஞரும் குறுக்கு விசாரணைக்கும் அதன் பின்னரான மீள் விசாரணைக்கும் உட் படுத்தப்படலாம். இரண்டாம் விளக்கம் பூரணமான நாளிலிருந்து ( 30 ) முப்பது நாட்களுக்குக் குறையாத அத்தகைய தொரு நாளில் மூன்றாம் விளக்கம் இடம் பெறுதல் வேண்டும் என்பதுடன் தொகுப் புரை நிகழ்த்தவெனத் தவணை இடப் பட முன்னர் எத்தருணத்திலும் வழக்காளி யாயினும், எதிராளியாயினும் தம் சார் பில் மேலதிக சாட்சியங்களைப் புதிய சாட் சிப்பட்டியலுடன் அணைப்பதற்கும் சாட்சிகள் நெறிப்படுத்துவதற்கும் தகுதியுடையவ ராதல் வேண்டும்.

குடியியல் வழக்குகளில் வழக்குச் செலவு அற விடுதல்.

12. தமிழீழச் சட்டக்கோவையின் குடியியல் வழக்கு நடவடிக்கை முறை என்னும் பகு தியின் ஆறாவது ( 06 ) பிரிவாகக் குடியி யல் வழக்குகளில் வழக்குச் செலவுகளை அறவாக்கச் செய்வது தொடர்பான பின் வரும் ஒழுங்கு சேர்க்கப்படுகிறது.

## காணிகள், ஆதனங்களின் உரித்து அல்லது வழக்கெழு காரணங்கள் சம்பந்தப்பட்ட விடயங்களின் பெறுமதி

| | ரூ. 10,000/- வரையில் | ரூ. 10,000/- தொடக்கம் ரூ. 50,000/- வரையில் | ரூ. 50,000/- மேற்பட்டவை |
|---|---|---|---|
| அ) கட்சிக்காரர்கள், சட்ட அறிஞர்கள் மூலம் வழக்குகள் தாக்கல் செய்ய அல்லது வழக்கில் எதிர்வாதாட அல்லது இடைபுகல் போன்ற விடயங்கள் பற்றிக் கலந்துரையாடல் செய்வதற்கு. | 25/- | 50/- | 100/- |
| ஆ) உரிமைக்கோரிக்கை, கேள்விக் கடிதங்கள் தயாரித்து அனுப்புவதற்கு | 25/- | 35/- | 50/- |
| இ) வழக்குச் சம்பந்தமாக நீதிமன்றப் பதிவாளர். சமாதான நீதவான் எதிர்க்கட்சியினரின் சட்ட அறிஞர்கள் போன்றோரைச் சந்திப்பதற்கு | 25/- | 35/- | 50/- |
| ஈ) வழக்கு அறிக்கை, மறுமொழி, மறுமொழிக்குமறுமொழி விண்ணப்பம்அல்லதுமுறையீடு போன்றவற்றைத் தயாரிப்பதற்கு | 25/- | 50/- | 100/- |
| உ) வழக்கறிக்கையுடன் அணைக்கவேண்டிய ஆவணங்கள், அழைப்புக்கட்டளைகள், போன்றவற்றைத் தயாரிப்பதற்கு | 25/- | 50/- | 100/- |
| ஊ) ஆவணங்கள், சத்தியக்கூற்றுக்கள்தயாரித்தற்கு. | 25/- | 35/- | 50/- |

| | ரூ. 10,000/- வரையில் | ரூ. 10,000/- தொடக்கம் ரூ. 50,000/- வரையில் | ரூ. 50,000/- மேற்பட்டவை |
|---|---|---|---|
| எ) நீதிமன்ற அலுவலகத்தில் எதிர்க்கட்சியினர் அனைத்த ஆவணங்கள் இணைப்புக்கள் போன்றவற்றைப் பார்வையிட்டுக் குறிப்பெடுப்பதற்கு, | 25/- | 50/- | 100/- |
| ஏ) தமது கட்சிக்காரனரயும், சாட்சிகளையும் விசாரணை செய்து விளக்கத்திற்கு ஆயத்தஞ் செய்தற்கு | 25/- | 50/- | 100/- |
| ஐ) வழக்கு நடவடிக்கையின் போது காணிகள், ஆதனங்கள் அல்லது வழக்கெழு காரணங்கள், சம்பந்தப்பட்ட காணிகள், ஆதனங்கள் போன்றவற்றைப் பிற இடங்களிற் சென்று பார்வையிடும்போது, | 50/- | 75/- | 100/- |
| ஒ) நீதிமன்ற அலுவலகத்தில் வழக்குச் செலவு பற்றித் தீர்மானிக்கப்படும் போது சமுகமளிப்பதற்கு, | 25/- | 35/- | 75/- |

இவை முறையே ஒவ்வொரு தடவைக்கும் ஒவ்வொரு ஆவணத்திற்கும் ஏற்புடையதாதல்வேண்டும்.

13. தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் ( 27 ) இருபத்தேழில் அமைந்துள்ள குடியியல்த் தவறுகளும் நிவாரணங்களும் பிரிவு ( 5 ) ஐந்து உப பிரிவு 'எ' 'ஐ' என்பன முற்றாக நீக்கப்படுகின்றன.

தமிழீழச் சட்டக்கோவை பக்கம் 27. பிரிவு 5 உப பிரிவு (எ. ஐ) நீக்குதல் பற்றி.

14. அ) தமிழீழச் சட்டக்கோவையின் பக்கம் ( 32 ) முப்பத்துஇரண்டில் அமைந்துள்ள திருமண ஏமாற்றம் என்பதன் கீழான "இருதாரமணம்" என அமைந்துள்ள விடயம் ( 5 ) ஐந்தாவது பிரிவாக எண்ணிடப்படுகின்றது.

இருதார மணம் என்னும் பிரிவு எண்ணிடப்படுகிறது.

ஆ) 'அ' விற் குறிப்பிட்டதான இருதார மணக்குற்றத்திற்கு, ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தண்டனை முற்றாக நீக்கப்பட்டுப் பின்வருமாறு மாற்றஞ் செய்யப்படுகின்றது. "இதற்கு ஆகக் கூடிய தண்டனையாக ஒரு வருடச் சிறையும் குற்றக் காசும் விதிக்கப்படும். இச்செயலை இரண்டாமவரும் தெரிந்து கொண்டு செய்தால் அவருக்கும் இதே தண்டனை விதிக்கப்படும்"

இருதார மணத்திற்கு மாற்றஞ் செய்யப்பட்ட தண்டனைகள்.

15. அ) தமிழீழச் சட்டக்கோவையின் தமிழீழ தொழில் நடைமுறைச்சட்டத்தில் 'ஊழியர்' என்ற பதத்திற்கு வரைவிலக்கணம் பின்வருமாறு அமைந்திருத்தல் வேண்டும்.

''ஒரு வேலை கொள்பவரின் கீழ் மறைமுகமான அல்லது நேரடியான அல்லது வாய்மூலமான, அல்லது எழுத்துமூலமான பொருந்துகையின் ( ஒப்பந்தத்தின் ) அடிப்படையில் தொழில் புரிபவர், இதன் கீழ் பயிலுனர்களும், தொழில் பழகுபவர்களும் உள்ளடங்குவர்''

'ஊழியர் என்பது"

"வேலை கொள்வோர் என்பது"

ஆ) "வேலை கொள்வோர்" என்றால் ஒருவரை வேலைக்கமர்த்துபவரும். இன்னொருவருக்காக ஒருவரை வேலைக்கமர்த்துபவரும் "வேலை கொள்பவர்" எனக் கருதப்படுவர். இதிற்கூட்டான முறையில் வேலைக் கமர்த்துபவர்களும் அடங்குவர்

உதாரணம்

ஒரு ஸ்தாபனம், கொம்பனி, கூட்டுத் தாபனம் அல்லது தொழிற்சங்கம் அல்லது இன்னொருவருக்காகத் தொழிலாளர்களை வேலைக்கமர்த் துபவரும் அவ்விதமே கருதப்படுவர்

"தொழில் வழக்குகளின் தீர்ப்பினை நடைமுறை செய்யும்போது தண்டனை வழங்குதல்"

இ) தொழில் வழக்குகளில் தீர்ப்புக்களை அமுல் நடத்தும் வேளைகளில் தண்டனை வழங்கப்படும்போது ஒரு கொம்பனி என்றால் ஒவ்வொரு இயக்குனரும், பிரதான அலுவலரும், உதாரணம் - முகாமையாளர், பங்குடமை வியாபாரமாகில் ஒவ்வொரு பங்காளியும், தொழிற்சங்கமென்றால் அலுவலர்கள் அதாவது தலைவர், பொருளாளர், செயலாளர் என்போர் தண்டிக்கப்படுவர்.

'வேலை கொள்வோர் எனத்தீர்மானித்தல்"

ஈ) ஒருவரை வேலை கொள்பவர் என்று தீர்மானிப்பதற்குக் கீழ்க்காணப்படுபவை ஏற்புடையன.

1. தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துதல்.

2. அவர்களை வேலையில் இருந்து நீக்குதல்.

3. அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளத்தைக் கொடுத்தல்.

4. அவர்களுடைய வேலைகளை மேற்பார்த்தல்,

5. வீடுமுறை வழங்கல்,

6. ஒரு இடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு வேலையாட்களை மாற்றஞ் செய்தல், போன்றன.

16. தமிழீழத் தொழில் நடைமுறைச் சட்டத்தில் மேன்முறையீடுகள் தொடர்பான விதி சேர்க்கப்படுகின்றது.

"தொழில் விடயங்கள் மேன்முறையீடு செய்யப் படுதல்"

1 தொழில் நீதிமன்றுகளால் வழங்கப்பட்ட தீர்ப்புகளில் மனநிறைவு ஏற்படாத தரப்பினர் தமிழீழச் சட்டக் கோவையின் மேன்முறையீட்டு ஒழுங்குகட்கமைய மேன்முறையீடு செய்யலாம்.

2. தொழில் நீதிமன்றத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ள விரும்பாத வேலைகொள்வோர் மேன்முறையீட்டு நீதிமன்றுக்கு மேன்முறையீடு செய்வதாக இருந்தால் அவர் கீழ்க்காணும்நிபந்தனைகளைக் கடைப்பிடித்து மேன்முறையீடு செய்தல் வேண்டும். ஒரு தொழிலாளிக்கு ஒரு குறிப்பிட்ட தொகைப்பணத்தை வழங்கவேண்டுமென்று நீதிமன்று தீர்ப்பு வழங்கியிருந்தால் அப்பணத்தைத் தொழில் நீதிமன்றப் பதிவாளரிடம் செலுத்தி அதற்கான பற்றுச்சீட்டைப் பெற்று அதை மேன்முறையீட்டு மனுவுடன் இணைக்க வேண்டும் ஒரு தொழிலாளிக்கு வேலை மாத்திரம் வழங்க வேண்டுமென்று தொழில் நீதிமன்று தீர்ப்பு வழங்கியிருந்தால் அத்தொழிலாளியின் சார்பிற் 12 மாதங்களிற்

"வேலைகொள்வோர் மேன்முறையீடு செய்தல்"

குரிய சம்பளத்தைத் தொழில் நீதி மன்றப் பதிவாளரிடம் செலுத்திப் பற்றுச்சீட்டைப் பெற்று அதனை மேன்முறையீட்டு மனுவுடன் இணைக்க வேண்டும். ஒரு தொழிலாளிக்கு வேலையும் குறிப்பிட்ட தொகை நட்டஈடும் வழங்கவேண்டுமெனத் தீர்ப்பு வழங்கியிருந்தால், அத்தொழிலாளிக்கு வழங்கப்பட்ட நட்டஈட்டுத் தொகையையும், அத்துடன் மேலதிகமாகப் 12 மாதங்களுக்குச் சமமான வேதனத்தையும் தொழில் நீதிமன்றிற் செலுத்திப் பற்றுச்சீட்டுப்பெற்று அதனை மேன்முறையீட்டு மனுவுடன் இணைக்க வேண்டும்.

**வேலை கொள்பவர் தீர்ப்பின்படி ஒழுகத் தவறினால் நடவடிக்கை**

17. தொழில் நீதிமன்றினால் அல்லது மேன்முறையீட்டு நீதிமன்றினால் வழங்கப்பட்ட தீர்ப்புக்களைக் குறிப்பிட்ட காலத்திற்குள் வேலை கொள்பவர் நிறைவேற்றத் தவறினால் விண்ணப்பதாரர் அதுபற்றி அண்மையில் உள்ள தமிழீழ மாவட்ட நீதிமன்றுக்குத் தீர்ப்பின் பிரதியுடன் விண்ணப்பிக்கும் பட்சத்தில் அம்மன்று வேலை கொள்பவரை மன்றுக்கு அழைத்து விசாரணை எதுவுமின்றித் தீர்ப்பில் வழங்கப்பட்ட நிவாரணங்களை அமுலாக்கும்படி கட்டளையிடும். அக்கட்டளையை வேலை கொள்பவர் நிறைவேற்றத் தவறினால் மாவட்ட நீதிமன்று குற்றப்பணம் அறவிடுவதுபோல் நிவாரணப்பணங்களை அறவிட்டு அவற்றைப் பின்னர் விண்ணப்பதாரருக்கு வழங்கும்.

**1993ம் ஆண்டின் 05 ஆம் எண் சட்டத்தில் திருத்தஞ் செய்வது பற்றி.**

18. 1993 ஆம் ஆண்டின் 05 ஆம் எண் மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்தில் பின்வரும் திருத்தங்கள் புகுத்தப்படுகின்றன.

அ) இச்சட்டத்தின் பிரிவு நான்கு ( 04 ) உப பிரிவு இரண்டின் இரண்டாவது துணைவிதி (2:2) நீக்கப்படுகின்றது.

ஆ) தமிழீழ மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்தின் பிரிவு நான்கின் ( 04 ) துணைப் பிரிவு நான்கு ( 04 ) முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வரும் பகுதி சேர்க்கப்படுகிறது.

"பொது மக்களின் பிரயாண ஊர்திகள்"

01. பொதுமக்களின் பிரயாண ஊர்தி ( சாரதி உட்பட (14) பதினான்கு இருக்கைகளுக்குட்பட்டது ) ரூபா. 1000/-

02. பொதுமக்கள் பிரயாண ஊர்தி ( சாரதி உட்பட (14) பதினான்கு இருக்கைகளுக்கு மேற்பட்டது ) ரூபா. 1000/-

இ) தமிழீழ மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்தின் பிரிவு ( 12 ) பன்னிரண்டு உப பிரிவு இரண்டின் ( 02 ) அ, ஆ, இ என்பவை நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வரும் விதி சேர்க்கப்படுகிறது.

அ) சிறிய லொறி ( நான்கு சில்லு லொறி ஏ. 40, ஏ.55, ஏ.50, டொயோட்டா, கையேஸ், கரவன், சவலெட், பெட்போட் வான் வகை, எல். டி. 2, எல். டி. 5, ஈ. எல், எவ்- 150, ஈ. எல். எவ்- 250 ) முதலியவற்றிற்கும் இவை போன்றவைகளுக்கும் ரூபா. 3000/-

ஆ) பெரிய லொறி ஆறு சில்லு லொறி, ஈ எல். எவ்- 350 (ஆறுசில்லு) பெட்போட் பெரியது, பென்ஸ், அசோக் லேலண்ட், இசுசு, ரி.எக்ஸ்50, ரி. எக்ஸ்.டி.55, 6 பி. டி. ஐ, எஸ்.டி. ரி) இவை போன்றவைக்கு ரூபா. 5000/-

ஈ) தமிழீழ மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டம் பிரிவு பன்னிரண்டு (12) உப பிரிவு நான்கின் (04) அ, ஆ. இ என்பன முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாகப் பின்வருவன சேர்க்கப்படுகின்றன.

அ) பொதுமக்கள் பிரயாண ஊர்தி சிறியது (சாரதி நீங்கலாகப் பதின்நான்கு இருக்கைகளுக்கு உட்பட்டது) ரூபா. 2000/-

ஆ) பொதுமக்களின் பிரயாண ஊர்தி பெரியது (சாரதி நீங்கலாகப் பதின்நான்கு (14) இருக்கைகளுக்கு மேற்பட்டது) ரூபா. 2500/-

உ) தமிழீழ மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்தின் பிரிவு பதின்மூன்று (13) நீக்கப்பட்டு அதற்கீடாக இவ்விடயம் சேர்க்கப்படுகிறது. 1994 ஆம் ஆண்டின் 5-ந்தரம் எண் சட்டத்தின் பிரிவு மூன்றின் (03) படி மோட்டார் ஊர்தியையோ அல்லது அடிச்சட்டத்தையோ அல்லது இயந்திரத்தையோ வைத்திருப்பவர் பதிவு செய்து கொள்ளத் தவறும்போது, இச்செயல் கண்டுபிடிக்கப்படுமிடத்து இவ்வாறு பதியப்படாத எவையும்,

1. மோட்டார் கார்

அ. நோயாளர் ஊர்தி

ஆ. பிரேத ஊர்தி

இ. ஜீப்வண்டி

ஈ. ஏனைய பிரத்தியேக பிரயாண ஊர்திகள்,

2. லொறி,

3. விவசாய உபயோக ஊர்திகள்

அ. உழவு இயந்திரம்.

ஆ. உழவு இயந்திர இழுவை வண்டி

இ. இருசக்கர இழுபொறி ஊர்தி

ஈ. இருசக்கர இழுவை வண்டி

4, பொதுமக்கள் பிரயாண ஊர்திகள்.

அ. பொதுமக்கள் பிரயாண ஊர்தி சிறியது.

ஆ. பொதுமக்கள் பிரயாண ஊர்தி பெரியது.

போன்ற ஊர்திகளாகவோ அல்லது இவ்வாறான ஊர்திகளின் அடிச்சட்டம், அல்லது இயந்திரமாகவோ அமையுமிடத்து அவ்விடத்திலேயே ரூபா. 1000/- குற்றப்பணம் தமிழீழ காவல்துறையால் தண்டனையாக விதிக்கப்படும் அத்துடன்

1) முச்சக்கர ஊர்தி

2) மோட்டார் சைக்கிள்

போன்ற ஊர்திகள் அல்லது இவற்றின் அடிச்சட்டம், அல்லது இயந்திரமாக அமையுமிடத்து இவை தொடர்பாக அந்த இடத்திலேயே தமிழீழ காவல்துறையால் ரூபா. 500/- குற்றப்பணம் தண்டனையாக விதிக்கப்படும்.

ஊ) இவ்வாறு அவ்விடத்திலேயே குற்றப்பணம் அறவிட்ட பின்பு அவ்வாறான மோட்டார் ஊர்தியை அல்லது அடிச்சட்டத்தை அல்லது இயந்திரத்தைப் பதிவு செய்யுமாறு தமிழீழ காவல் துறை அவ்வுரிமையாளரை, உரிய மோட்டார் ஊர்திப் பதிவுச் செயலகத்திற்கு அனுப்பிப் பதிவை மேற்கொள்ளச் செய்தல் வேண்டும்.

எ) இவ்வாறு மோட்டார் ஊர்தியையோ அல்லது அதன் அடிச்சட்டம் அல்லது இயந்திரத்தையோ பதிவு செய்யாத எவரிற்கும் அந்த இடத்திலேயே குற்றப்பணம் கட்டும்படி பணிக்கப்படும்போது, அதனைச் செய்ய மறுக்கும் எவரையும் தமிழீழ மாவட்ட நீதிமன்றின் முன் காவல்துறையினர் முற்படுத்திச் சுருக்கமுறை விளக்கமொன்றின் பின் இக்குற்றப்பணம் அறவிடப்பட்டு, இச்சட்டத்தின் பிரிவு பதினெட்டு ( 18 ) உப பிரிவு 'ஊ' வின் படியான ஊர்தியைப் பதிவு செய்தல்நடவடிக்கை நீதிமன்றின் ஊடாகத் தொடரப்படும்.

உரிமை மாற்றத்தின் பொழுது புதிய ஆண்டு வரி அனுமதிப்படிவம் பெறுதல் தொடர்பாக

ஏ) 1993 ஆம் ஆண்டின் 05 ஆம் எண் மோட்டார் ஊர்திகள் பதிவுச் சட்டத்தின் பிரிவு பதினெட்டு (18) உப பிரிவு ஆறு (06) முற்றாக நீக்கப்பட்டு அதற்கீடாக இதனகத்துப் பின்வருகின்ற விதி சேர்க்கப்படுகின்றது. "உரிமை மாற்றஞ் செய்யப்படும் மோட்டார் ஊர்தியின், ஏற்கனவே இருந்த ஆண்டு வரி அனுமதிப்பத்திரம் செல்லுபடியற்றதாகும். என்பதனால் உரிமை மாற்றத்தின் பொழுது புதிய ஆண்டு வரி அனுமதிப்பத்திரத்தினைப் புதிய உரிமையாளர் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்."

❄ ❄ ❄